2nd March 1961]

*Plantation (Vaigai Dam)*

* 528 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா, வைகை அணைக்கட்டு சுற்றிலுமுள்ள சுமார் 5 சிறு குன்றுகளிலும் செடி வளர்க்க உத்தேசமுண்டா ?

(இ) இந்தப் பகுதியை காட்டிலாகாவில் சேர்க்க உத்தேச முண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) There is a proposal to raise fuel plantations over an area of 100 acres scattered in 7 or 8 hillocks around the Vaigai Dam in Madurai District during 1961–62 under the Farm Forestry Scheme.

(b) No, Sir.

SRI N. R. THIAGARAJAN : கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கின்ற அறிக்கையில் 30 சத விகிதம் காடுகள் இருக்க வேண்டும், அதற்கு நம்மிடம் 17 சத விகிதம்தான் காடுகள் இருக்கின்றன என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அந்த முறையில் நம்முடைய வனங்களை பெருக்குவதற்கு மதுரை ஜில்லாவில் பல இடங்களில் மண் குன்றுகளாக காட்சியளிக்கும் இடங்களை எல்லாம் ஃபாரஸ்ட்டாக மாற்றுவதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வன வளத்தை அதிகமாக்க வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் 'பார்ம் பாரஸ்ட்' என்ற திட்டம் வட்டார வளர்ச்சி அடிப்படையில் நடந்து வருகிறது.

*Coastal Highway (Madras-Kanyakumari)*

* 529 Q.—SRI A. VEDARATHNAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னையிலிருந்து கன்யாகுமரி வரை அமைக்கத் திட்டமிட்ட கரையோர நெடுஞ்சாலை வேலை எந்த அளவு நிறைவேறியிருக்கிறது ?

(இ) இதில் எந்த இடத்தில், என்ன வேலை, எவ்வளவு பாக்கி இருக்கிறது ?

(உ) இவை எப்போது பூர்த்தியாகும் ?

THE HON. SRI P. KAKKAN : (a), (b) & (c) The Government of India have been addressed to include this Scheme in the Third Five-Year Plan for National Highways. The work will be taken up for execution as soon as the approval of the Government of India is received.